# கல்வெட்டு

(தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறையின் காலாண்டு இதழ்)

ஆனந்த ஆண்டு சித்திரைத் திங்கள்

இதழ் 1

அவ்வப்பொழுது கண்டுபிடிக்கப்படும் புதிய கல்வெட்டுகள் அளிக்கும் ரலாற்றுச் செய்திகளை அறிவதற்கும், கல்வெட்டிலிருந்து அறியப்படும் ிற செய்திகளையும் கலைவரலாற்றையும், மக்கள் அறியும் வகையில் ாலாண்டு ஆய்விதழ் ஒன்றை இத்துறை வெளியிடவேண்டும் ன்று தமிழ்நாடு தொல்பொருள் ஆய்வு அறிவுரைக் குழு முடிவு செய்துள்ளது. இத்தீர்மானத்தினை இக்குழுவின் அங்கத்தினர், பேராசிரியர் , சுப, மாணிக்கம் அவர்கள் கொண்டு வந்தார்கள். அதன்படி இவ்விதழ் வெளியிடப்படுகிறது. இது வரலாற்றுக்குப் பெரிதும் உதவவேண்டும் னும் நோக்குடையது. கல்வெட்டு, கலை பற்றிய கேள்வி பதில் பகுதியும், ல்வெட்டுச் சொற்களுக்குப் பொருளும், வரும் இதழ்களில் வெளியிடலாம் ன்ற எண்ணம் உள்ளது. இவ்விதழ் சிறக்க படிப்போர் கருத்துக்கள் ரவேற்கப்படுகின்றன.

தமிழக முதல்வர், மாண்புமிகு டாக்டர் கலைஞர், மு. கருணாநிதி அவர்கள் சோடையில் இத்துறையில் கல்வெட்டுப் பயிற்சி பெற்றவர் ளுக்கு 22-5-1972 ல் சான்றிதழ் வழங்கினார்கள். அவ்வமயம் அங்கு வைக்கப்பட்டு அவர்களது கவனத்தைக் கவர்ந்த ஒரு நடுகல்லினைப் பற்றி அரியதொரு உரை ஆற்றினார்கள். பல்வேறு பணிகளுக்கும் இடையில் தமிழகக் கல்வெட்டுகளில் ஆர்வம் காட்டி, வரலாற்றுப் பேராசிரியர் களும் வியக்கும் வகையில் அந்நடுகல்லின் வரலாற்றுச் சிறப்பை டுத்துரைத்த அவ்வுரையை இவ்விதழின் தொடக்கக் கட்டுரையாக வெளியிடுவதில் பெருமை கொள்கிறோம்.



தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை

சென்னை

14-4-74

# என்னைக் கவர்ந்த கல்வெட்டு



தமிழக முதல்வர்





செங்கத்தில் உள்ள சிலையின் படமொன்றை இங்கே காணலாம். அச்சிலை என்னை மிகவும் கவர்ந்தது. வீரனொருவன் நிற்கின்றான். அவன் பின்னால் ஒரு நாய் நிற்கிறது. இதுதான் அந்தச் சிலையின் அமைப்பு. பல்லவர்களிலே பெரும் புகழ் பெற்ற மன்னன் மகேந்திரவர்மன் காலத்தியது அது. எருமைப் பண்ணையின் காவலன் அவன். அவனைக் கள்ளர்

எருமைகளைக் காப்பாற்றுகின்ற அந்த காவல் கூடத்தில் அவன் கொல்லப்பட்டான்.

அந்த இடத்தில் "கோவிவன் என்னும் நாய்", நாயினுடைய பெயரே கோவிவன். இப்பொழுது ஏதேதோ பெயர்கள் வைக்கிறோமே, ஆங்கிலப் பெயர்களை நாடி-அப்பொழுது.

"கோவிவன் என்னும் நாய் இரு கள்ளரைக் கடித்து காத்திருந்த வாறு".

இப்படி அந்தக் கல்வெட்டிலே எழுதப்பட்டுள்ளது ஒரு நாயினுடைய வீரச்செயல்; அதற்கு முந்தி தான் எடுத்துக் கொண்ட பொறுப்பை கடமையுணர்வோடு செய்து, அங்கே கொல்லப்பட்ட ஒரு வீரனுடைய வாழ்க்கையை இந்தக் கல்வெட்டிலே அன்றைக்கு காண்பித்திருக்கிறார்கள் என்றால் இது நம்முடைய பழங்கால மன்னர்களால், பழங்காலத் தமிழர்களால், தமிழ் நாட்டு மக்களால் எவ்வளவு போற்றப்பட்டிருக்கிறது என்பதனை நாம் அறிந்துகொள்ள முடியும்.



கள் வீழ்த்திவிடுகிறார்கள். வீரனுக்குத் துணையாக நின்ற நாய் அந்த ஆ... பட்ட வீரன் விழுந்து கிடந்த இடத்திலேயே, அவனை அடித்து வீழ்த்தி... கள்ளர்களோடு போரிட்டு, அந்தக் கள்ளர்களை வீழ்த்தி வெற்றி கண்ட... இதைக் கல்வெட்டாக ஆக்கியிருக்கின்றார்கள். இன்றைக்குச் சிலை வைத்த... சிலைக்குக் கீழே யார் தலைவர், யார் திறப்பாளர் என்று எழுதினால் கோ... கோபித்துக் கொள்ளுகின்ற புண்ணியவான்கள் எல்லாம் நாட்டிலே இரு... கின்றார்கள். அன்றைக்கு ஒரு நாய் இரண்டு பேரை அடித்துக் கடித்து... கொன்றது. அதற்கு ஒரு கல்வெட்டு எடுத்தான். நன்றி மறவாத... நாய் மாத்திரமல்ல, அந்தக் காலத்துத் தமிழனும் நன்றி மறவாதவனா... இருந்தான் என்பதைக் காட்டிக் கொண்டான் அந்தக் கல்வெட்டி... மூலமாக.



எவ்வளவு அழகான கல்வெட்டு-

"கோவிசைய மயீந்திர பருமற்கு"

அவர்கள் மகேந்திரவர்மன் என்று எழுதினார்களோ அல்லது மகேந்தி... வர்மன் என்று எழுதினார்களோ, கல்வெட்டிலே இருப்பது

"கோவிசைய மயீந்திர பருமற்கு முப்பத்து நான்காவது; வாணகே... அரைசரு மருமக்கள் பொற்றெக்கையார் இளமகன் கருந்தேவக்கத்தி".

காவல் காத்த அந்த வீரனுடைய பெயர் கருந்தேவக்கத்தி என்... தாகும். மகேந்திரவர்மனுடைய காலத்தில், 34-வது ஆண்டில், வாணகே... என்கின்ற அரசருடைய மருமக்களான பொற்றெக்கையாருடைய இ... மகன் கருந்தேவக்கத்தி.

"தன் எருமைப் புறத்தே வாடிபட்டான் கல்".

# தமிழகத்திற்கு நாவலர் தந்த பரிசு



ஒரு நாட்டின் வரலாறு என்பது அந்நாட்டில் மக்கள் வா தொடங்கிய நாட்களிலிருந்து இன்றுவரை, சமுதாயம், சமயம், கட் முதலிய பல்வேறு துறைகளில் பெற்ற வளர்ச்சியை உரைப்பதாகும் இவை அனைத்திலும் அவ்வப்போது தோன்றும் கருத்துக்களின் வளர்ச் அனைத்தையும் எடுத்துரைப்பவை, அக்காலத்தோர் விட்டுச் சென்றுள் சான்றுகளே. பழமையே பெரிதென்று போற்றுவோர்கள் உண்டு. கடந் இருநூறு ஆண்டுகளின் நிகழ்ச்சிகளே வரலாறு என்று சாதிப்போரு உண்டு. இரண்டு நிலைகளும் ஏற்கத்தக்கவை அல்ல. பல்லாயிரம் ஆண் களாகச் சிறந்த நாட்டில் அந்தந்தக் காலத்துக்கு உரிய இடத்தை அளித் அறிவதே சிறந்த வரலாறு.

தமிழகத்தைப் பொறுத்தவரையில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கும் மேலாக தொடர்ந்த வரலாற்றை எடுத்துரைக்க ஏராளமான சான்றுகள் கிடைத்துள்ளன. இவற்றில் பெரும்பாலானவை இன்றியமையாத கல் வெட்டுகள். உலகில் வேறு எங்கும் இல்லாத அளவுக்கு கல்வெட்டுகள் தமிழகத்தில் காணப்படுகின்றன.

இருப்பினும் நம்நாட்டில் தமிழக வரலாறு உரிய இடத்தைப் பெற வில்லை. ஆங்கிலேய கவர்னர்கள், துரைகள் இவர்களது மிகச் சிறிய செயல்கள் கூட மிகப் பெரியதாக எழுதப்பட்டு இன்றும் காணப்படு கின்றன.

எருமைகளைக் காப்பாற்றுகின்ற அந்த காவல் கூடத்தில் அவன் கொல்லப்பட்டான்.

அந்த இடத்தில் "கோவிவன் என்னும் நாய்", நாயினுடைய பெயரே கோவிவன். இப்பொழுது ஏதேதோ பெயர்கள் வைக்கிறோமே, ஆங்கிலப் பெயர்களை நாடி-அப்பொழுது.

"கோவிவன் என்னும் நாய் இரு கள்ளரைக் கடித்து காத்திருந்த வாறு".

இப்படி அந்தக் கல்வெட்டிலே எழுதப்பட்டுள்ளது ஒரு நாயினுடைய வீரச்செயல்; அதற்கு முந்தி தான் எடுத்துக் கொண்ட பொறுப்பை கடமையுணர்வோடு செய்து, அங்கே கொல்லப்பட்ட ஒரு வீரனுடைய வாழ்க்கையை இந்தக் கல்வெட்டிலே அன்றைக்கு காண்பித்திருக்கிறார்கள் என்றால் இது நம்முடைய பழங்கால மன்னர்களால், பழங்காலத் தமிழர்களால், தமிழ் நாட்டு மக்களால் எவ்வளவு போற்றப்பட்டிருக்கிறது என்பதனை நாம் அறிந்துகொள்ள முடியும்.



)தற்கு வரலாறே காரணம். ஆங்கில ஆட்சி இருந்தவரை நமது வரலாறு றைக்கப்பட்டு அவர்களது நடவடிக்கைகளே பாட நூல்களில் இடம் பற்றிருந்தன. அவர்கள் சென்ற பிறகு எவ்வளவோ சீர்திருத்தங்கள் மற்கொள்ளப்பட்டிருக்கின்றன. இருப்பினும் பழைய நிலையில் அதிகம் றுதல் இல்லை. இதற்கு ஒரு காரணம் அடிப்படைச் சான்றுகளான ல்வெட்டுக்களையும், கலையையும் வரலாற்றையும் இணைத்து அறியக் கூடிய ரின் எண்ணிக்கை அதிகரித்தாலொழிய வரலாற்றை எழுதுவதில் தரம் யர வழியில்லை. கலையைப் போற்றுவோர் அதிகரிக்க இடமில்லை. சுற்று ாவுக்கு வருவோருக்கு எடுத்துரைக்கும் ஆற்றல் மிகுந்தோர் இருப்பது ல்லை. ஆதலின் இந்த அடிப்படைக் காரணத்தை அறிந்து அதை ாற்றும் பணியை மேற்கொண்ட பெருமை நமது தமிழக கல்வித்துறை மைச்சர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்களையே சாரும். அனைவரும் ல்வெட்டைப் படிக்கும் வகை செய்ய வேண்டும் என்பது அவர்களது அவா.

அவர்களது நேர்முக ஆர்வத்தினாலும், ஊக்கத்தினாலும் தமிழ்நாடு ரசு தொல்பொருளாய்வுத்துறை கடந்த நான்கு ஆண்டுகளாக கோடை ல் கல்லூரி, பள்ளி ஆசிரியர்களுக்கு கல்வெட்டுப் பயிற்சி அளித்து வரு றது. இது ஆசிரியப் பெருமக்களிடையே பெரும் எழுச்சியையும், விழிப் பயும் ஏற்படுத்தியுள்ளது.

மாண்புமிகு நாவலர் அவர்கள் மற்றொரு அழியாத செல்வத்தை ம் தமிழகத்துக்குத் தந்துள்ளார்கள். கல்வெட்டுக் கலை அறிந்து காள்ள ஓராண்டு படிப்பு, டிப்ளமா பெறும் வகையில் கல்வெட்டுப் யிற்சி நிறுவனம் ஒன்றை (Institute of Epigraphy) இத்துறையின் கீழ் றுவியுள்ளார்கள். இதன்கீழ் எட்டு எம்.ஏ. பட்டம் பெற்ற மாணவர் ர் பண்டைய வட்டெழுத்து, தமிழ் எழுத்து, வரலாறு, கலை முதலியன யின்று வருகிறார்கள்.

சில கல்லூரிகளிலாவது கல்வெட்டைச் சிறப்புப் பாடமாக வைக்க வேண்டுமென்பது நாவலர் அவர்களது விருப்பம். விரைவில் அதுவும் நிறைவேற்றப்படும் என்பதில் ஐயம் இல்லை. இவை தமிழக வரலாற்றுக்கு நாவலர் அவர்கள் ஆற்றியுள்ள புகழ் மிக்க தொண்டு என்பதை வரலாறே கூறும்.

---

## அருணகிரிநாதர் காலம் என்ன?

திருப்புகழ் தந்த அருணகிரிநாதர் காலம் எது? இவர் 15-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்று இது காறும் கூறினர். ஆனால் இவர் 14-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். ஒரு கல்வெட்டு இச்செய்தியைக் கூறு கிறது. திருவண்ணாமலையில் உள்ள இந்தக் கல்வெட்டு, **சம்பந்தாண்டான், அருணகிரி, சோமநாத ஜீயர்** என்னும் மூவரையும் கூறுகிறது. இதன்படி கி. பி. **1340**-ல் அருணகிரிநாதர் வாழ்ந்தார் என்பது தெளிவு.

# கொங்கு நாட்டில் கலவரம்

சுமார் 350 ஆண்டுகளுக்கு முன் ஓர் எல்லைக் கலவரம் நடந்தது. காங்கே
நாட்டுக்கும் பூந்துறை நாட்டுக்கும் நடந்த சண்டை இது. இதில் காங்கேய
சர்க்கரைக் கவுண்டரும், பூந்துறை நாட்டாரும் ஒருவரோடு ஒருவர் போ
கொண்டனர். சர்க்கரைக் கவுண்டரின் வீரர்கள் 30-40 பேர் இறந்தார்கள்.
துறை நாட்டார் 40-60 பேர் இறந்தார்கள்.

அப்பொழுது கொங்கு நாடு மதுரை ஆட்சியின் கீழ் இருந்தது. திரும
நாயக்கரின் அண்ணன் முத்துவீரப்பர் அப்பொழுது ஆண்டு கொண்டிருந்தா
முத்துவீரப்பர் விஜயநகர அரசின் பிரதிநிதியாக ஆண்டார். அவர் ஓர் அரசா
அதிகாரி (அரண்மனை மனுஷர்). அவர் பூசலைத் தீர்த்து வைத்தார். அதற்கு இ
திறத்தாரும் ஓலை எழுதிக் கொடுத்தனர். இவ்வோலை மேலோலை என்று குறிக்
படுகிறது.

டாக்டர் மகாமகோபாத்யாய உ. வே சாமிநாதய்யர் அவர்கள், கொங்
நாட்டில் சேகரித்த சாசனங்களில் சில காகிதங்களில் படி எடுக்கப்பட்டு இப்பொழு
உ. வே. சா. நூலகத்தில் உள்ளன. அவற்றில் 5 வெவ்வேறு சாசனங்களின் ப
உள்ளன. அவற்றின் தலைப்புகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் எங்கி
யாரால் படி எடுக்கப்பட்டன என்ற விவரங்கள் இல்லை மேலே "கொங்
என்று உ. வே. சா. கைப்பட எழுதியுள்ளார்கள். இப்படிகளில் பல மெ
எழுத்துகளுக்குப் புள்ளி இடவில்லை. பிழைகளும் நிறைந்துள்ளன. சில சொற்க
கொங்கு நாட்டுக் கொச்சைச் சொற்களாகக் காணப்படுகின்றன. திருத்தத்தோ
அவற்றில் ஒன்று இங்கு அச்சிடப்படுகிறது. இதைக் கொடுத்து உதவிய உ. வே. ச
நூலகத்தாருக்கு எமது நன்றி.

## பூந்துறை நாட்டார் கொடுத்த மேலோலை

சுவஸ்தி ஸ்ரீ மன்மாக மண்டலேசுரன் மகாமண்டலேசுரன் அரியரா
விபாடன் பாஷைக்குத் தப்புலவாய கண்டன், கண்ட நாடு கொண்டு
கொண்டநாடு குடாதன், மூவரிராய கண்டன், கட்டாரிச் சாளுவமீசுரகண்
டன், துட்ட நிற்கிற சிட்டபரிபாலன் எம்மண்டலமும் யீளமும் யிலங்காபு
யுந் திறை கொண்டருளிய ராசாதிராசன், ராசபரமேசுர ஙிராசாமாத்தாண்ட
ஙிராச வல்லவன், ராசபுங்கவன், ராசகேசரி ராசராசநவரற்றின நாராயணன்
துலுக்கர் தளவிபாடன், துலுக்கர் மோகந் தவிள்த்தான், யிரணதீ
பரராமன், துஷ்ட்ட நெஷ்டடூர கொட்டர், கோலாகலன், மதியாத மன்ன
மகுடஞ் சிதறப் பதி சூறை கொள்ளும் பரசுராமன், அசுபதி, கெசபதி, நரப
நவகோடி நாராயணன், அங்க வங்கழர், கலிங்கர், கேரளர், மகதர், வங்களர்
துலுக்கர், கௌடர், மத்தகர் கோச்சர், அவுணர், மறவர், மலையாழர்
கொங்கர், கம்பளர், குகுதர், குச்சரர், கொந்தழர், ரெட்டியர், தெலுங்கர்

ளுவர், துக்கரர், சல அட்டகர், மருட்டகர், மருடர், நம்பிக்கர், மபோசர், காசலர், ஆரியர், பப்பரர், கன்னடர், சோனகர், சீனகர், மலையாழர், மலே தவி விபாடர், மத்தக கொடொரி, பதினெட்டுக் கோட்டத்து, மன்னிய ண்டன் நவனதிபுடை சூள்(ர)கிய பூலோக புரந்தரர், உத்தரர் தெட்ஷண றுவ பட்ஷம சதுச் சமுத்ராதிபதி, வீரதீர சேர சோழ பாண்டியர், ல்லாழ பயங்கர தேவராயர், வீரமதராயர், மல்லிகார்ச்சுனராயர், விருப் ஷப் பொபொலராயர், வல்லாழராயர், பிரவுடதேவராயர், வெங்கிட யர், கிஷ்ட்டணராயர், இராமதேவராயர், சிக்கராயர், சக்கராயர், ஷ்ட்டிரங்களாயர், காரியற்துக்குக் கர்த்தரான கச்சிப் பதியை யுடைய சுவநாத கிஷ்ட்டணப்ப முத்து வீரப்ப நாயக்கரய்யனவர்கள், மதுரை ண்டி மண்டலம், கொங்கு மண்டலம், வலமண்டல முதலாயப் புடவி ழ்ந்த இருநூற்வக்காத வட்டகையும், வனுதி சுத்தமாக செங்கோல் நீதி தியுணர்ந்து உலக முழுதாண்டு மும்மூர்த்தியும் முத்தமிழ் விநோதன், சரி டை தாங்குந் தானவினோதன், அளிக்குச் சந்திரன், ஒளிக்குக் கதிரோன், றிதகவுக் ககஸ்தியன், அறதத்ததுக்கு அரிச்சந்திரன், மறதத்ததுக்கு வன்னி, சால்வினில் தருமன், தோழினில்[1] வீமன், வில்லினில் விசையன், வாளினில் மன், பரிதனில் நகுலன், கரிதனி லுதையன், போகத்தி லிந்திரன், புகளினில்ப் பாசன், செலத்தினில் வாரி, நடுவினி லியமன், தயிரியத்தில் நிருதி, தனத் குபேரன் எனப் புகழ்படைத்து, யின்சொலா லினிதளித்து, வன் லால் மறங்கடிந்து, அளுங்குளவிக்கு[2] அன்புடைய தாயேபோல், அனைத்து யிர்களுக்கும் இனிமையே நல்கி, சற்குண நான்கும் வள்ளுவருரைத்த ப்பால் மொளியும்[3] படியே அறிவையறிந்து, அல்லவை கடிந்து, நல்லவை நாட்டி இப்பாடி செங்கோல் நீதி வளுவாமல் நடத்தி வருகிற காலேயில்,

ர ப கொங்கு மண்டலம் ராதாபுரஞ் சீர்மையில் காங்கய நாட்டில், யின் ரக் கவுண்டர் சீர்மை காரையூருக்கு மேல்கரைப் பூந்துறை நாட்டில் அரச்சலூருக்கும் எல்லைப் பிக்கைகாய் சக்கரைக் கவுண்டர் வஞ்சியங்குளத் திலே கொட்டை போட்டும் அரச்சலூரர் சேனபதிபாளையத்திலே கொட்டை போட்டும் வெகு மோதண்டங்களாய் சக்கரைக் கவுண்டர் வகைச் சேவு கரிலே முற்பது நாற்பது பட்டும், அறச்சலூர் பூந்துறை நாட்டார் வகையிலே நாற்பது அறுபது பட(க), படக்குடுத்தும் இப்படி மோதண்டங்களாய் சண்டையாய்க் கிடந்தபடியினாலே இருபத்துநாலு நாட்டாரும் ராதாபுரம் சீர்மைக்குக் கற்த்தராய் வந்த அரமனை மனுஷர், திம்மப்ப முதலியாரவர் களும், ராதபுரந் தலத்துச் சம்பிறுதி தக்ஷிணாமூர்த்திய்யன், திருவாளிப் பிள்ளை தலத்துச் சேர்வை எல்லாரிமாவுத்தர், தளவாய்த் திருமலை நாயகர், சிட்டராவுத்தர், நஞ்சைய நாயகர், நயினப்ப நாயக்கர், இராமய நாயக்கர் கொளும்ம வாலாரசர் இவர்கள் அனைவருங் கூடித் தீர்த்தது. சக்கரைக் கவுண்டர் கையெளு[த்து]ப்பட மெலோலை பூந்துறை நாட்டாருக்குக்

1. தோளினில்
2. அழுங்குழவிக்கு.
3. மொழியும்.

கொடுத்து பூந்துறை நாட்டாரனைவருங் கூடி நாட்டார் கையெழுத்துப் எழுதிக் குடுத்த மேலோலைப்படி,

கலியுகசகாற்த்தம், சகூளாம்அ க்கு மேல் செல்லா நின்ற பிங்கு வருஷம் ஆடி மீ ம-௳-பூர்வ பக்ஷமும் திசமியும் பெற்ற மங்கள ஆ நாள், அனைவருங் கூடி இசகு தீர்த்து நடந்ததுக்கு விபரம்.

திம்மப்ப முதலியாரவர்களும், இருபத்து நாலு நாட்டாருக்கு துங் யிலிறங்கி திம்மப்ப முதலியாரவர்கள் ஆணையின்[4] பேரிலே ஏறிக் கொண் நாடனைவரும் குதிரையின் பேரிலே ஏறிக்கொண்டு, நடந்து கல்ப்[5] போட்டு குடுத்ததுக்கு விபரம்.

காங்கய நாடு அறச்சலூருக்கும் நடு எல்லைக்கும்ங் கிணறு கிளக்குச் சென்னுய்க் கல்லு இதன் கிளக்கு வளஞ்சியங் குளம் ஏரிக்கு தெற்கு நல்லமங்கைபுரம், காரையூற்காடு ஏரிக்கு வடக்கு, அறச்சலூ காடு இதன் கிளக்குக்(க) கருங்கல்மேடு இதன்கிழக்குத் தாந்தூக்கிப் புளி மரம், இதன் கிளக்கு நெடுஞ் சாத்துக் கருந்தேவன் குதிச்ச கல்லடு இதன் கிளக்கு நல்லாகட்டிப் பாளையத்துக்கு வடக்கு இலவந்தத்ததுக்கு தெற்குக் காரைமடைக் கல்லடுக்கு;

இந்தப் படிக்கு திம்மப்ப முதலியாரவர்களும் இருபத்து நாலு நா டாரும் இம்மட்டும் நடந்து தேறுகடை பண்ணி தீர்ந்தபடிக்கு நாங்க நாடனைவரும் சக்கரைக் கவுண்டருக்கு மேலோலை கொடுத்தோம். இதற் பூந்துறை அளப்பிச்சாக் கவுண்டர் வெள்ளொட்டு முதலியாக் கவுண்ட நசையனூர்ப் பிறப்பணக் கவுண்டர். எளுமாத்தூர் விசுவநாதச் சின்னை கவுண்டர், வெட்டுவரிபவப் பட்டாலிக் கவுண்டர், அறச்சலூர்ப் பொட்ட கவுண்டர், முருங்கைப் பெருந்தோசத் தீத்தாக் கவுண்டர் அனுமப்பள் சர்க்கரைக் கவுண்டர், கீங்கூர் செங்கோடக் கவுண்டர் இந்தப் படிக்கு அ வரும் சம்மதித்தோம்.

இதிலே ஆதாமொருவர் இசகினல்[6] அரமனைக்கு ஆயிரத்திருநூ பொன்னும் அவதாரமிறுத்து, ஆய்க்கினையும் பட்டு, எல்லையும் இளந் போகக் கடவனுகவும். இப்படி தீர்ந்துது. இதற்கு இசகு இல்லை. கற் தாக்கள் பாதத்தவணையே, திம்மப்ப முதலியாரவர்கள் பாதத்தாணைய இருபத்து நாலு நாட்டாரவர்களாணையே, இதுக்குத் தப்பாது. இந்தப்ப எல்லை யனுபவிச்சுக் கொண்டுவரக் கடவோராகவும்.

இதற்குச் சாக்ஷி தென்கரை நாடு வேணுவுடையாக் கவுண்டர் தலைய நாடு வெள்ளக் கவுண்டர், சிறிவியாக் கவுண்டர், பொம்மய நாயக்கர் வெங்கல நாடு காளத்தி கவுண்டர், மணல் நாடு தெண்ணிலி அனந்

---

4. ஆணையின்.
5. எல்லைக் கல்.
6. பிசகினல்.

புண்டர், அரைய நாடு தலையநல்லூர் நாச்சியப்ப கவுண்டர், கொந்தழம் ட்டத்து ராயன், காங்கய நாடு காங்கய மண்ணுடியார் பல்லவராயக் புண்டர், குறுப்பு நாடு விசைய மங்கலம் வட மலைக் கவுண்டர், திங்களூர் தம்பரக் கவுண்டர், புங்குலிக்க நாடு வெளராசி அவுஞசிக் கவுண்டர், பருந்தொழூர்ப் பிடாரப்பக் கவுண்டர், கண்டியங் கோவில் உடையாக் புண்டர், ஆற்காடு மச்சக் கவுண்டர், சோளியாண்டக் கவுண்டர்,[7] சத்திய ங்கலத்தார் ஸ்தானுதிபதி தளஞ்சனூரங்கப்ப நாயக்கர், தலத்தாரில் ல்லாரி மாவுத்தர் தளவாயத் திருமலை நாயக்கர் சாக்ஷி. இந்த மேலோலை லந் திருவாளிப் பிள்ளை கைய் எளுத்து. சென்னி மலையப்பராலட் படிக்கவும். இந்த மேலோலை பளங்கடையாச் சீரணமாயிருந்த படியினுலே .6 [8] எளுதினது. காரையூர்தலத்துக் கணக்கு அரசபிள்ளை கைய்எளுத்து. ழ்ந் காண்டீசுரர் லட்சிக்கவும். பெரியோர்கள் பொறுத்தருளவும். அளப் சிசான் முதலி பிறப்பணன் சின்னையன் பட்டாலி பொட்டன் தீத்தான் தகணன் செங்கோடன்.

---

7. சோழியாண்டக் கவுண்டர்.
8. சரிபார்த்து.

| | | |
|---|---|---|
| சகு | : | பிசகு, முறைகேடு |
| க்கைகாய் | : | பிசைகாய்—பிசகாய் என்பதன் திரிபாக இருக்கலாம். |
| தறுகடை | : | தீர்மானம் |
| வதாரமிருத்து | : | அபராதம் கொடுத்து |
| மோதண்டங்களாய் | : | மோதல்களாய் |
| தாபுரம் | : | தாராபுரம் |
| ஆய்க்கினை | : | ஆக்ஞை என்பதன் திரிந்த வடிவம்; ஆணை என்பது பொருள் |
| ாப்தம் / சூளாமஅ | : | சக ஆண்டு 4718 = கி. பி. 1617. |

---



இது யாருடைய காசு?

விவரங்கள் அடுத்த இதழில்!

# தஞ்சை ஓவியமும் தடுத்தாட்கொண்ட புராணமு

நடன. காசிநாதன், எம்.ஏ.,
கல்வெட்டாய்வாளர், தொல்பொருள் ஆய்வுத்துறை

நலத்தான் சிறந்து விளங்கிய திருமுனைப்பாடி நாட்டில் திருநாவலூர் னும் திருப்பதியில் வாய்மை குன்றாத் திருமறையவர் பலர் வாழ்ந்து வந்த அவருள் மாதொருபாகனுர்க்கு வழிவழி அடிமை செய்யும் சடையனர் என்பவர்க் இசைஞானியார் என்ற அம்மையாருக்கும் பிள்ளையாய் நம்பியாரூரர் திரு அவத செய்தார்.

நாடாளும் வேந்தன் நரசிங்க முனையரென்பார் பிள்ளைப் பருவத்தி நம்பியாரூரரை அவரது பெற்றோர்களிடமிருந்து பெற்று சொந்தப் பிள எண்ணி நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்து வந்த நம்பிஆரூரர் தமது இளமைப் பருவத்திலேயே எல்லாக் கல்வி நலங்களை பெற்றுத் திகழ்ந்தார். மணப்பருவம் வந்தது பெற்றோர்கள் பெண் பார்க் தலைப்பட்டனர். புத்தூர் என்னுமூரில் சடங்கவி என்ற அந்தணர்குலப் பெண் மணம் பேசினர் மணநாள் வந்தது மண மகனை அலங்கரித்து வீதி உ அழைத்துச் சென்றனர். அழைத்துச் செல்கையில் கண்ணுற்ற மக்கள் கூட் என்ன செய்தது என்பதை,

'கண்களெண் ணிலாத வேண்டுங் காளையைக் காணவென்பார்
பெண்களிலுயர நோற்றாள் சடங்கவி பேதை யென்பார்
மண்களிகூர வந்த மணங்கண்டு வாழ்ந்தோ மென்பார்
பண்கவி னிறைந்த கீதம் பாடுவா ராடுவார்கள்'

என்று தடுத்தாட்கொண்டபுராணத்தில் விவரிக்கப்படுகிறது.

அவ்வாறு நிகழும் மக்களின் எண்ண அலைகளினூடே உலாச் சென்று மண நிகழவிருந்த மணப்பந்தரை அடைகிறார் நம்பிஆரூரர். வேதியர் வேதம் ஓத ஒ லிக்கின்றனர். மறையவர் கூட்டம் இந்த ஒப்பரும் நிகழ்ச்சியைக் கண்ணுற குழு வண்ணம் இருக்கிறது. அப்பொழுது முதியவர் ஒருவர் உள்ளே நுழைகிற நுழைந்தவர் மணத்தொழில் தொடங்கும் பந்தரிடை நம்பியின் எதிரில் நின் 'இந்த மொழி கேண்மின் எதிர் யாவர்களும்' என்கிறார். ஆங்கு அமர்ந்திரு அருமறை அந்தணர் யாவரும் ஆச்சிரியத்தால் தலை நிமிர்த்தி "நன்றுமது நல்வா இவண் நீர்மொழியின் நீர்மொழிவ" தென்றார். 'யான் ஒரு வழக்கினைக் கூறப்போ றேன். அவ்வழக்கைத் தீர்த்த பின்னர் உம் கடமையை ஆற்றுங்கள்' என்று வ வர் கூற, 'உமது வழக்கைக் கூறுங்கள். அது முடிந்த பின்னரே வதுவை ஆரம்பிப்போம்' என்றனர் அவையில் குழுமியிருந்தவர்களும்.

உடனே 'இந்நாவலூரன் எனது அடிமை' என்று இவ்வுலக உயிர்கள் அனை தையும் ஆட்கொண்டுவிட்ட இறைவனாகிய அம்முதியவர் கூறினார் இவர் உம அடிமையெனில் ஆதாரம் ஏதேனும் உண்டோ என்று மறையவர்கள் புகல 'இ நாவலூரானின் பாட்டன் எழுதிய ஆள்விலை ஓலை இதோ உளது" என்று கூறி அ அவையின் கரணத்தான் முன் நீட்டுகிறார். அவையின் கரணத்தான் அவ்வோலை வாங்கிச் சுருளைப் பிரித்து நன்றாக விரித்து, எழுதியுள்ள வாசகங்களை அவையி முன் படிக்கிறான். அவையோரும், நாவலூராரும் ஆச்சரியத்தால் பதுமை கின்றனர் பின்னர் அவையோர் ஆரூரரைப் பார்த்து 'நீர் தோற்றீர்'; இ முனிவர்க்கு 'பான்மையினேவல் செய்தல் கடன்' என்று விளம்புகின்றனர். 'வி

றை யிதுவேயாகில் யான் இதற்கு இசைகிறேன்' என்று நாவலூராரும் உடன்படு ஞூர். பின்னர் இறைவன் தாம் யார் என்பதைத் தெரிவித்து நாவலூராரை ல்லற வாழ்வில் நுழைய விடாது தடுப்பதே தனது நோக்கம் என்று கூறி ஆட் ாண்டு விட்டார் என்கிறது தடுத்தாட்கொண்டபுராணம்.

மேற்கூறிய இப்புராணத்தின் வழக்காடும் காட்சியைத் தஞ்சைப் பெருவுடை ர் கோயில் உண்ணுழியின் பின்பக்கச் சுவரில், சோழர் காலத்து ஓவியன் ஒருவன் து கைவண்ணத்தாலும் சிந்தனைத் திறனாலும் உயிரோவியமாக நம் கண்முன் ட்டியுள்ளான்.

ஓவியத்தில் மண்டபம் காட்டப்பட்டுள்ளது. மண்டபம் சாதாரண மண்ட ம் அல்ல. பல தோரணங்கள் நிறைந்த மண்டபம். தோரணத்தின் நடுவில் இரு ல மாடம் தீட்டப்பட்டிருக்கிறது. தோரணத்தின் கீழ் வரி காணப்படுகிறது. ும் தோரணங்களையும் தாங்கி ஐந்து தூண்கள் நிற்கின்றன. மூன்று தூண் ிலும், இரண்டு தூண்கள் சுவரோடு ஒட்டியும் தீட்டப்பட்டுள்ளன. தூண் ாதிகை, தாமரை இதழ் விரிந்த நிலையில் காணப்பெறும் பலகை ஆகியவைகளை டையதாக இருக்கின்றன. தூணின் அமைப்பும் தோரணத்தின் எழிலுமே இது ழர் கால ஓவியம் என்பதைத் தெளிவாக்கிவிடுகின்றன.

மண்டபத்தின் நடுவில் மறையவர்கள் பலர் கூடியிருக்கின்றனர். அனைவரும் மர்ந்த நிலையில் உள்ளனர் முதியோராய் அமர்ந்திருப்போரின் கைகளில் ஓலைச் வடி காணப்படுகிறது. அந்த ஓலைச்சுவடிகள் வழக்கு மன்றத்தில் சந்தேகம் ற்படும்பொழுது பார்த்துக் கொள்வதற்கு உதவும் சட்ட நூல்களாக இருக்கலாம். றையவர்கள் அனைவரும் அரையில் மட்டும் ஒரு வெண்துகில் உடுத்தியிருக்கின்ற . அதுவும் முழங்கால் அளவுக்கே நீண்டுள்ள பஞ்சகச்சமாய்க் காட்சியளிக்கிறது. தாளில் ஒரு வெண்துகில் மட்டுமே காணப்படுகிறது ஒவ்வொருவர் மார்பிலும் னூல் காணப்படுகிறது. அனைவரும் குடுமி உடையவராய் பெரும்பாலோர் தாடி சை உடையவராய் காட்சி அளிக்கின்றனர். நெற்றியில் திருநீறு காணப்படுகிறது. து அவர்கள் சிவாசார்யர்கள் என்பதைத் தெரிவிக்கிறது.

இவர்கள் மத்தியில் வயோதிகர் ஒருவரும் வாலிபர் ஒருவரும் நேருக்கு நேர் ற்கின்றனர். வயோதிகர் அரையில் கோவணத்தையும் தோளில் வெண்துகிலைப் னூல் அணிவதுபோன்று சுற்றியும் அணிந்திருக்கிறார். தலைமயிர், தாடி ஆகியவை ரைத்து அவருடைய வயோதிகத் தன்மையைப் பறை சாற்றுகின்றன. குழை ணியத்தக்க தாழ்ந்த காதுகளைக் கொண்டிருக்கிறார். வலது கையில் விரித்த ஓலை ம் இடது கையில் குடையுமாக, நேரே நிமிர்ந்து நிற்க முடியாது சிறிதே கூனி ற்கும் நிலை. கண்களிலே ஒரு கம்பீரப் பார்வை. வாய் ஏதோ கேட்கும் நிலை ந்திரத்திலே தீட்டப்பட்டுள்ள இந்த உருவையும் தடுத்தாட்கொண்டபுராணத்தில்,

'காதிலணி கண்டிகை வடிந்த குழை தாழச்
சோதிமணி மார்பினசை நூலின்னொடு தோளின்
மீதுபுனை யுத்தரிய வெண்டுகிலுடங்க
ஆதபம் மறைக்குடை யணிக்கரம் விளங்க

பண்டிசரி கோவண உடைப் பழமை கூரக்
கொண்டதொர் சழங்கலுடை யார்ந்தழகு கொள்ள
வெண்டுகிலுடன் குசை முடிந்து விடு வேணுத்
தண்டொருகை கொண்டு கழல் தள்ளு நடை கொள்ள'

என்று கூறப்பட்டிருக்கும் சிவபெருமானின் வயோதிகத் தன்மையையும் ஒப்பு நோக்கினல் இவ்வுருவத்தைப் பார்த்துத்தான் சேக்கிழார் பெருமான் சித்தரித் தாரோ என்று எண்ணும்படியாக அமைந்துள்ளது.

நம்பிஆரூரர் பார்த்தாரைப் பரவசப்படுத்தும் பருவத்தினராய், கனை ஒ
முகத்தினராய், அழகே உருவாய்க் காட்சி அளித்தார் என்றெல்லாம் தடுத்
கொண்டபுராணம் பேசும்,

'மன்னவர் திருவுந் தங்கள் வைதிகத் திருவும் பொங்க
நன்னகர் விழவு கொள்ள நம்பியாரூரர் நாதன்
தன்னடி மனத்துட் கொண்டு தகுந்திரு நீறு சாத்திப்
பொன்னணி மணியார் யோகப் புரவி மேற்கொண்டு போந்தார்'

என்ற வரிகளின் வாயிலாக.

இவ்வோவியத்திலும் அவரது அழகு பொருந்திய உருவம் மிக உன்னத
யில் தீட்டப்பட்டுள்ளது. ஆனல் அவரது நிலை மிகவும் அஞ்சி நடுநடுங்கி எத
செய்வதென்று தெரியாமல் விழிக்கும் நிலையாக உள்ளது. சுந்தரர் நிற்கும் தோ
றத்தைக் காண்கையிலேயே அவர் வழக்கில் தோற்றுவிட்டார் என்பதை உணர்
வதாக உள்ளது.

வயோதிகராய் வந்த இறைவனின் கையில் ஒரு ஓலையும், சிவாச்சாரியார்க
கையில் ஒரு ஓலையும் காணப்படுகின்றன. இதில் சிவாச்சாரியார்களின் கை
உள்ள ஓலை ''அவையிலே முதியவரைப் பார்த்து நீவிர் கூறுவதற்கு ஆதாரம்

''ஆட்சியில் ஆவணத்திலன்றி மற்றயலார் தங்கள்
காட்சியின் மூன்றிலொன்று காட்டுவாய்''

என்று மறையவர்கள் கேட்க, முதியவரும் தாம் வைத்திருந்த ஓலையை எடுத்
கொடுத்து நீங்கள் இதிலே காணலாம் என்று காட்ட, அதை வாங்கிப் பார்க்கி
ஓலையாக இருக்கலாம். அதைப் பார்த்த மறையவர்கள் அனைவரும் திகைக்கின்ற
ஒருவரையொருவர் ஆச்சரியத்தால் பார்த்துக் கொள்கின்றனர். சிலர் சுந்தரன
பார்க்கின்றனர். கரணத்தான் கையிலே தரப்பட்டிருக்கின்ற ஓலையில் 'இப்
அறிவேன் [இர]வேளைப் பகலாக' என்று சோழர் கால எழுத்தில் எழுதப்ப
ருக்கிறது. அவ்வெழுத்துக்களும் அவ்வோவியம் சோழர் காலத்தைச் சார்ந்த
என்பதை நிரூபிக்கின்றன. எழுத்துக்கள் காணப்படும் அப்பகுதி ஓலையின் இறுதி
பகுதியாகும். ஓலையிலே சாட்சிகளாகக் கையொப்பமிட்டுள்ள பகுதியாகு
எனவே இதைக் கண்ணுற்ற அனைவரும் ஒத்துக் கொண்டு சுந்தரர் முதியவரி
அடிமைதான் என்று தீர்ப்பளித்து விடுகின்றனர்.

முதியவரின் கையில் காணப்படும் மற்றொரு ஓலை, முதலிலே கொடுத்
ஓலையைச் சுந்தரர் கைப்பற்றி கிழித்தெறிந்தவுடன் ''அந்த ஓலை ஒன்றுதான் உள
என்று எண்ணுதே. அது வெறும் பிரதிதான். மூல ஓலை இங்கு என்னிடமே உள்ளது
என்று காட்டும் மூல ஓலையாக இருக்கலாம்

இவ்வாறு ஓவியத்தின் வாயிலாக ஒரு உன்னத நிகழ்ச்சியைப் படைத்து
காட்டியுள்ள அச்சிற்பியின் திறனை எவ்வாறு புகழினும் தகும். வழக்காடும் நிகழ்ச்
யையும், மறையவர்களும் சுந்தரரும் என்ன செய்வதென்று அறியாமல் திகைக்கு
திகைப்பையும், முதியவர் தம் வழக்கு வெற்றி பெற்றது கண்டு பெருமிதத்தோ
நிற்கும் நிலையையும் காண்கையில் ஓவியன் தான் கேள்வியுற்ற பாட்டுக்கு வடிவ
தந்தானு அல்லது வடித்தெடுத்த வண்ண ஓவியத்துக்கு ஏற்பப் பாட்டமைந்தத
என்ற ஒரு சந்தேகத்தைத் தூண்டிவிடுகிறது இந்த எழிலார்ந்த ஓவியம்.

# பதியம் பாட பார்வை இழந்தோர்

கு. தாமோதரன் எம். ஏ.,
கல்வெட்டாய்வாளர், தொல்பொருள் ஆய்வுத்துறை.

இருபதாம் நூற்றாண்டில், அறிவியலில் ஆச்சரியப்படத்தக்க அள வு வளர்ச்சி பெற்றுள்ள இன்றைய சூழ்நிலையில், தமிழக அரசு கண் பார்வை இழந்தோர்க்குக் கண்ணொளி வழங்கிடவும், உடல் ஊனமுற்றோர் க்கு அரசுப் பணிகளில் முதலிடம் அளித்திடவும் முன்வந்து அரிய பணியை ஆற்றி வருகிறது.

இத்தகைய அரும்பணி இன்றைக்கு 865 ஆண்டுகளுக்கு முன் னதாகவே நம் தமிழகத்தில், சோழர் காலத்தில் நடைபெற்றிருக்கிறது என் பது நமக்கெல்லாம் ஆச்சரியமாக இருக்கிறதல்லவா? அதுபற்றி தெரிவிக் கும் கல்வெட்டு ஒன்று இன்றளவும் நல்ல முறையில் காணப்படுகிறது.

தென் ஆற்காடு மாவட்டம், விழுப்புரம் வட்டம் திருவாமாத்தூரில் உள்ள 'ஆளுடைய அழகிய தேவர் கோயிலில்' சோழ மன்னன் இரண் டாம் குலோத்துங்கனின் இரண்டாம் ஆட்சியாண்டில் (கி.பி. 12-ஆம் நூற்றாண்டு) பொறிக்கப்பட்ட கல்வெட்டு ஒன்று உள்ளது. இது மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். இக்கல்வெட்டு திருவாமாத்தூரில் எழுந் தருளியுள்ள இறைவனுக்கு திருப்பதியம் பாடியவர்களைப் பற்றி குறிப்பிடு கிறது. ஆளுடைய அழகிய தேவர் கோயிலுக்குத் தனிச் சிறப்பு உண்டு. ஏனெனில் இங்கு திருப்பதியம் பாடியவர்கள் பிறவிக் குருடர்கள். பார்வை தெரியாத, மற்றவர் பார்வைக்குத் தென்படுகின்ற புறக்கண்கள் இவர் களுக்கு இருந்தும் அவைகள் பயன்படாது போகவே அகக்கண்களால் இறைவனை உணர்ந்தவர்கள். இதன் காரணத்தாலோ என்னவோ திருப் பதியம் பாடும் பேறு பெற்றனர்.

திருப்பதியம் பாடும் பொறுப்பை பதினறு குருடர்கள் வகித்து வந்தனர். இவர்களுக்கு வழிகாட்டும் பணிக்கு இருவர் அமர்த்தப்பட்ட னர். திருப்பதியம் பாடுபவர்கள் குருடர்களாக இருந்த காரணத்தால், இவர்களுடைய உதவியாளர்களைக் கல்வெட்டு 'கண்காட்டுவார்' என்று குறிக்கிறது. எவ்வளவு பொருத்தமான சொல் இது. கண் இழந்துள்ள அவர்களுக்குத் தங்கள் கண்களின் துணையால், அவர்களுக்குக் கண்ணுக இருந்து வழி காட்டுவதால் 'கண்காட்டுவார்' என்று அழைக்கப்பட்டனர் போலும்.

கண் இல்லாதவர்கள் இவ்வுலகில் வாழத் தகுதி அற்றவர்கள் என்று கருதி புறக்கணிக்கப்பட்டார்கள். இவர்கள் வாழ்வில் இனி ஒளி இல்லை என்று கருதப்பட்டது. இந்த ஒளி இல்லாத விளக்குகளை சோழர்

காலச் சமுதாயம் புறக்கணித்ததா? இல்லை. அப்பொழுது அமைந்திருந்த அரசும், அரசனும் இத்தகைய குருடர்களுக்கு வாழ்வளிக்கத் தவறவில்லை. திருப்பதியம் பாடுபவர்கள் குருடர்களாக இருந்தாலும் நன்கு கற்றறிந்தவர்கள் ஆதலால் அவர்களைப் புறக்கணிக்காமல் இறைவனுக்கு திருக்கடயம் பாடும் பேற்றை அவர்களுக்கு அளித்தனர்.

திருப்பதியம் பாடிவரும் குருடர்கள் பதினாறு பேர்களுக்கும், காட்டுவார் இருவருக்கும் சேர்த்து பதினெட்டு பேர்களுக்கு உணவுக்காக அளிக்கப்பட்ட நெல்லின் அளவு குறிக்கப்படுகிறது. நாள் ஒன்றுக்கு, ஒன்றுக்கு பதக்கு நெல் வீதம் பதினெட்டு பேர்களுக்கு மூன்று நெல் அளிக்கப்பெற்றது. (ஒருபதக்கு - இரண்டு மரக்கால், பன்னிரண்டு மரக்கால் - ஒரு கலம்) முன்னூற்று அறுபது நாட்களுக்கு பதினெட்டு பேர்களுக்கு ஆயிரத்து எண்பது கலம் நெல் அளிக்கப்பெற்றது. ஆளுக்கு என்பதைக் கல்வெட்டு 'பேரால்' என்ற சொல்லால் குறிக்கிறது. இதைக் கல்வெட்டு கீழ்க் கண்டவாறு குறிக்கிறது.

"திருப்பதியம் பாடிவரும் குருடர்கள் பேர் பதிநறுவரும் இவர்களுக்கு கண்காட்டுவார் இருவரும் ஆகப்பேர் பதிநெண்மர்க்கு பேரால் நெல்லு பதக்காக நாளொன்றுக்கு நெல்லு முக்கலமாக நாள் முந்நூற்றறுபதுக்கு நெல்லு ஆயிரத்தெண்பதின் கலமும் ...."

இது தவிர இவர்கள் அணிந்து கொள்வதற்கு ஆடை எவ்வாறு வழங்கப் பெற்றது என்பதையும் அறிய முடிகிறது. இதைப் 'புடவை முதல்' என்று கல்வெட்டு குறிக்கிறது. 'புடவை முதல்' என்பது திருப்பதியம் பாடுபவர்களுக்கும், அவர்கள் உதவியாளர்களுக்கும், கட்டிக் கொள்ள துணிக்காகக் கொடுத்ததைக் குறிக்கிறது. 'புடவை' என்ற சொல் துணி அல்லது ஆடை என்ற பொருளில் வழங்கி வந்திருக்கின்றது. இதை சிதம்பரத்தில் உள்ள 'ஆடவல்லப் பெருமான்' கோயிலில் உள்ள முதலாம் இராஜேந்திரனின் இருபத்து நான்காம் ஆட்சியாண்டு (கி.பி. 11-ஆம் நூற்றுண்டு) கல்வெட்டு குறிக்கிறது. சாலைமடையன் (சமையல்காரன்) ஒருவனுக்கு உணவுக்காக ஆறு நாழி நெல்லும், அவனுக்கே புடவைக்கு (ஆடைக்கு) தனியாக நெல்லும் அளிக்கப் பெற்றது. இதே போன்று கோயிலில் பணி செய்யும் பெண்டுகள் ஐந்து பேர்களுக்கு உணவுக்காக குறுணி நெல்லும், அவர்களுக்கே புடவைக்கு பத்து கலம் நெல்லும் அளிக்கப்பெற்றது என்பதை நோக்கும் பொழுது 'புடவை' என்ற சொல் ஆண், பெண் இருவரும் உடுத்திக் கொள்ளும் ஆடையைக் குறிப்பதாகக் கொள்ளலாம். இதே பொருளில் இரண்டாம் குலோத்துங்கன் காலத்திலும் 'புடவை' என்ற சொல் வழங்கி வந்ததிருக்கின்றது. ஆனால் இப்பொழுது புடவை என்ற சொல் பெண்கள் கட்டிக் கொள்ளும் 'சேலையை' மட்டுமே குறிக்கிறது.

புடவை முதலுக்கு ஆள் ஒன்றுக்கு மூன்று மாதத்துக்கு ஒரு காசு வீதம் ஆண்டொன்றுக்கு நான்கு காசுகள் வழங்கப்பெற்றன. அந்

ந்தியில் பதினெட்டு பேர்களுக்கு ஆண்டு ஒன்றுக்கு எழுபத்திரண்டு றவ்கள் ஆகின்றன. ஒரு காசுக்கு இருபது கலம் நெல் வீதம் எழு ற்றிரண்டு காசுகளுக்கு ஆயிரத்து நானூற்று நாற்பது கலம் நெல் திருக்கப் பெற்றது. இந்த நெல்லுக்கு ஒரு வேலிக்கு நூற்று இருபது கலம் ப் வீதம் பன்னிரண்டு வேலி நிலத்தைக் கைக்கொண்டு திருப்பதியம் வொர் பதினெட்டு பேர்களும் மூன்று வேளையும் (மூன்று சந்தியும்) யிலுக்கு வந்து திருப்பதியம் விண்ணப்பஞ் செய்து வந்தனர் என்று வெட்டு குறிக்கிறது.

அப்பர் பெருமான் தமது திருவாமாத்தூர் திருப்பதிகத்தில்

"பண்ணிற் பாடல்கள் பத்திசெய் வித்தகர்க்(கு)
அண்ணித் தாகும் அமுதினை ஆமாத்தூர்
சண்ணிப் பானைத்த மர்க்கணித் தாயதோர்
கண்ணிற் பாவையன் னவன் காண்மினே"

று ஆமாத்தூர் இறைவனைப் பாடுகின்றார். பக்தியின் பெருக்கால் இனை வந்தடைந்து திருப்பதியம் பாடிய அடியவர்களுக்குக் கண்ணின் பாவையைப் போன்று விளங்குவான் என்று குறிப்பிடுகின்றார். இக்கல் வெட்டில் குறிக்கப்படும் திருப்பதியம் பாடும் குருடர்களுக்கு இவ்விறைவனே ர்வை அளிக்கும் பரம்பொருளாக விளங்கினனோ என்ற ஐயத்தை இப் தியம் உண்டாக்குவது நோக்கத்தக்கது.

## இது என்ன?

இரட்டை புதையல்



இதைப்பற்றிய இனிய செய்திகள் இனி வரவிருக்கிறன.

# கொங்கு நாட்டில் வருணதேவன் வழிபாடு[1]

மா. சந்திரமூர்த்தி. எம்.ஏ.,
அகழ்வாய்வாளர், தொல்பொருள் ஆய்வுத்துறை

உலகில் பல பகுதிகளில் வாழும் ஆதிவாசிகளிடமும், உழவர்களிடமும் மழையை வேண்டி கடவுளை வணங்கும் வழக்கம் இருந்து வந்துளது. இத்தகைய வழக்கத்தை தமிழகத்திலும் தொன்று தொட்டு காணலாம். மழை வேண்டி குறிஞ்சி நிலத்தில் உள்ள குறவர்கள் தெய்வத்தை வழிபட்டார்கள் என்பதனைச் சங்க இலக்கியங்கள் எடுத்துக் கூறும். தமிழ் நாட்டில் மழையை வேண்டி செய்யும் சடங்குகளாக 'கொடும்பாவி இழுத்தல்', 'மழைக் கஞ்சி எடுத்தல்' போன்ற வழக்கங்கள் இன்றும் உள்ளன.

இச்சடங்குகள் தொடர்பாக மக்கள் பல வாய்மொழி இலக்கியங்களையும் தொன்று தொட்டுப் பாடி வருகின்றனர். இவ்வாய்மொழி இலக்கியங்கள் இடத்திற்கும், சூழலுக்கும் ஏற்ப பல மாற்றங்களுடன் விளங்குகின்றன. பொதுவாக மழை பெய்யாத காலங்களிலும், மழை மிகுதியாக பெய்து மகிழ்ச்சி பெற்ற நேரங்களிலும், மழை தேவைக்கு மேல் மிகுதியாகப் பெய்து பாதிக்கப்பட்ட காலங்களிலும் கிராம மக்கள் பல நாட்டுப் பாடல்கள் பாடுவதுண்டு.

குறிப்பாக இக்கட்டுரையில் திருச்சி மாவட்டம், கருவூர்ப் பகுதியில் உள்ள நாட்டுப் பாடல்களும், அதுபற்றிய சடங்குகளும் இடம் பெறுகின்றன. இத்தகைய பாடல்களை, தமிழகத்தில் நாட்டுப் பாடல்களைத் தொகுத்தளித்த திரு. கி. வா. ஜகநாதன், திரு. பெ. தூரன், திரு. செ. அன்னகாமு, திரு. நா. வானமாமலை ஆகியோரின் தொகுப்பு நூல்களிலும் காணலாம்.

இத்தகைய வழிபாட்டுச் சடங்கிற்கு 'மாலக் கிண்ணிச் சோறு' என்றும் 'மழைக் கஞ்சி எடுத்தல்' என்றும் பெயர்கள் வழங்குகின்றன.

**மழைக் கஞ்சி எடுக்கும் முறை:**

தொடர்ந்து மழை பெய்யாதக் காலங்களில் கிராமத்துக் கன்னிப் பெண்கள் கூட்டமாக ஒன்று கூடி, சுடுமண் கலயத்தை கையில் ஏந்திக் கொண்டு வீடுதோறும் சென்று மழைக் கஞ்சி எடுக்கச் செல்வர். செல்லும் பொழுது தங்கள் வறுமையின் நிலையை தெளிவுபடுத்தும் பாடல்களைப் பாடுவர். அப்பாடலில் அவர்கள் வறுமையும், வருணன் வழிபாட்டையும் வானிலை அறிவும் தெளிவாகக் காணலாம். துட்டுக்கு நெல் வாங்கி தோட்டம் தெளித்து வைத்து, வானத்தை நோக்க, வந்த மழைப் போகும் காட்

1. திருச்சி மாவட்டம் கருவூர்ப் பகுதியில் கட்டுரை ஆசிரியர் நேரிடையாக மக்களிடம் தொடர்பு கொண்டு தொகுத்தவை.

ர்களை வாட்டமுறச் செய்கின்றது. வட்டிக்கு நெல் வாங்கி வயல் எல் ம் தெளித்து வைத்து, வானத்தை நோக்க வந்த மழை செல்லும் குறி . ஏழை நெஞ்சங்களை வறுமையில் சுமை தாங்கியாக்குகிறது.

வானவீதியில் உள்ள ஒன்பது கோள்களில் 'வெள்ளி' என்ற சுக் ளைப் பற்றி பண்டு அறிந்திருந்தனர். சூரிய மண்டலத்தில் ஒளி மிக்க ாள் இதுவே ஆகும். வெள்ளி கோள் தென்திசை எழுதல் தீய நிகழ்ச் ின் அறிகுறி என்றும், வெள்ளி கோள் வடதிசையில் நில்லாமல் திசை ிந்து தெற்கேகின் நாட்டில் மழை பெய்யாது வற்கடம் உண்டாகும் ிறும் பண்டைய தமிழ் மக்கள் நம்பினர். இதனை சங்க இலக்கியங்கள் ித்துக் காட்டுகின்றன.

'இலங்குகதிர் வெள்ளி தென்புலம் படரினும்' -புறம்(35:7)

'தென்றிசை மருங்கின் வெள்ளி யோடினும்' -புறம் (117:2)

'வெள்ளி தென்புலத் துறைய விளைவயற்
பள்ளம் வாடிய பயினில் காலை' -புறம் (388:1-2)

'வசையில் புகழ் வயங்கு வெண்மீன்
திசை திரிந்து தெற்கேகினும்' -பட்டிய (1-2)

'விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும்' -சிலம்பு (10:103)

இவ்வாறு வெள்ளிக் கோளைப் பற்றி சங்க இலக்கியம் காட்டும் ித்துக்களை இருபதாம் நூற்றாண்டில் கருவூர் பகுதியில் உள்ள கிராம களின் வாய்மொழி இலக்கியத்திலும் காணலாம். அப்பாடலை நோக்கு ாம்.

'கிண்ணியிலே மாக்கரைச்சி
கங்கையிலே கோலம் போட்டு
கோலம் கலையலியே
கொள்ளை மழை பெய்யலியே!

சட்டியிலே மாக்கரைச்சி
சாலையெல்லாம் கோலம் போட்டு
கோலம் கலையிலியே
கொள்ளை மழை பெய்யலியே!'

வட்டிலிலே மாக்கரைச்சி
வாசலிலே கோலம் போட்டு
கோலம் கலையிலியே!
கொள்ளை மழை பெய்யலியே!

வெள்ளி தென்தெசையில்
வெண்மேகம் வடதெசையில்
வெள்ளாமை நம்பி நிற்கும்
வெள்ளாளன் எத்திசையில்!

துட்டுக்கு நெல் வாங்கி
தோட்டம் தெளிச்சி வைச்சி
துட்டோ சுமருதய்யா
தொடுத்த மழை போயிடுச்சே!

வட்டிக்கு நெல் வாங்கி
வயலெல்லாம் தெளிச்சி வைச்சி
வட்டி சுமருதய்யா
வந்த மழை போயிடுச்சே !

கம்பம் பயிரெல்லாம்
கரையான் அரிக்காது
அந்தரவம் கேட்டு
வந்திறங்கு வருணதேவா !

சோள பயிரெல்லாம்
சொக்கான் அரிக்காது
அந்தரவம் கேட்டு
வந்திறங்கு வருணதேவா !

புஞ்சை பயிரெல்லாம்
பூச்சி அரிக்காது
அந்தரவம் கேட்டு
வந்திறங்கு வருணதேவா ! 1

இத்தகைய கருத்துப் பொதிந்தப் பாடலை கவுண்டர் இனப்பெண் பாடிக்கொண்டு, கஞ்சிக் கலயத்தை கையில் ஏந்தி வீடு வீடாகச் செல் அப்பொழுது கிராமத்தினர் சோறு, கம்பஞ் சோறு, சோளக் கூழ், வர கூழ், அரிசிக் கஞ்சி முதலியவற்றை உப்பில்லாமல் கலயத்தில் இடு இத்தகைய முறைக்கு மழைக் கஞ்சி எடுத்தல் எனப்பெயர். இத்தன வழக்கு கொங்கு நாட்டில் பிற பகுதிகளிலும் இருப்பதாக அறிகிறோம்.

வழிபாடு :

உப்பில்லாக் கஞ்சியை கலயத்தில் பெற்றுக் கொண்ட கன் பெண்கள் ஊரில் உள்ள பிள்ளையார் கோயிலுக்கு எடுத்துச் செல் பிள்ளையாரை வணங்கி வழிபடுவர். கஞ்சிக் கலயத்தை கோயிலின் பகுதியில் வைத்து, ஊரில் உள்ள கன்னிப் பெண்கள் எல்லாம் கலயத்தை சூழ்ந்து வட்டமாக அமர்வர். ஊரிலுள்ள வெள்ளைச் சேலைக்கார விதவை பெருமகள் அக்கலயத்தில் உள்ள உப்பில்லா கஞ்சியை அகப்பையில் எடுத் எல்லாக் கன்னிப் பெண்களுக்கும் கொடுப்பாள். அப்பெண்கள் இருகை குவித்து கஞ்சியை வாங்கிக் குடிப்பர். ஒவ்வொரு பெண்ணி கும் கஞ்சியைக் கொடுக்கும் விதைவை பெருமகள், தன் கையில் உள் அகப்பையால் எல்லோருடைய தலையிலும் தட்டுவாள். இவ்வாறு வ பாடு செய்வர்.

பூசை முடிந்து, வானேந்திரம் செல்லு முன் கஞ்சிக் கலயத்தை சூழ்ந்துள்ள பெண்கள் ஒன்று சேர்ந்து ஒப்பாரி வைப்பர். அப்பாடல் கண்ணீரில் பூத்த கவிதை மலர்களாக விளங்குவதைக் காணலாம்.

பணத்துக்கு நெல் வாங்கி
பாடெல்லாம் நாத்து விட்டேன்
பத்தி நீங்க பாருங்களேன்

பத்தினியா புலம்பு வதை
பாடெல்லாம் வாடு வதை!

கடனுக்கு நெல் வாங்கி
காடெல்லாம் நாத்து விட்டேன்
கண்டு நீங்க பாருங்களேன்
கர்ணகியா கலங்குவதை
காடெல்லாம் வாடுவதை!

துட்டுக்கு நெல் வாங்கி
தோட்டமெல்லாம் நாத்துவிட்டேன்
தோப்பேறிப் பாருங்களேன்
தோகை மயில் புலம்புவதை
தோட்டமெல்லாம் வாடுவதை!

அசலுக்கு நெல் வாங்கி
அசலூரு நாத்து விட்டேன்
அண்டி நீங்க பாருங்களேன்
அருந்ததியா புலம்பு வதை
அசலூரு வாடுவதை!

ஏலத்துக்கு நெல் வாங்கி
ஏகதேசம் நாத்துவிட்டேன்
எட்டி நீங்க பாருங்களேன்
ஏந்திழையா புலம்புவதை
ஏகதேசம் வாடுவதை! 2

விவசாயத்தையே நம்பியிருக்கும் ஏழை மக்கள் அசலுக்கும், பணத்க்கும், கடனுக்கும், ஏலத்திற்கும் நெல் வாங்கி நிலங்களில் நாற்றுவிட்டு ழை இல்லாமல் பயிர்கள் வாடும்பொழுது அவர்கள் மனதில் ஏற்படும் ன்பச் சுமைகளை இப்பாடல் வெளிப்படுத்துகிறது.

னேந்திரம் செல்லுதல் :

பெண்கள் எல்லாம் கோயிலில் கூடி வழிபட்டு கஞ்சியைக் குடித்து டித்த பிறகு, வெற்றுக்கலயம், அகப்பை, பிரிமனை ஆகியவற்றை எடுத் க்கொண்டு, குழந்தைகளையும் தூக்கிக் கொண்டு ஊரின் எல்லையை ண்டிச் தேசாந்திரம் செல்வர். இப்படி செல்வதை 'வானேந்திரம் செல்லுதல்', 'தேசாந்திரம் செல்லுதல்,' 'பரதேசம் செல்லுதல்' என்று வாறு அழைக்கிருர்கள். தேசாந்திரம் செல்லும் வழக்கம் பாண்டி நாட் ம் உண்டு. இப்படி செல்லும்பொழுது மழையின்றி வருந்தும் துயிரினை டலாகப் பாடுவர். அவற்றுள் ஒரு சில காணலாம்.

பூமியை நம்பியல்லோ வருணமகாதேவா!
புள்ளைகளை பெத்துவிட்டோம் வருணமகாதேவா!

பூமிசெய்யும் கோளாறு வருணமகாதேவா!
புள்ளதொந்தி வாடுதப்பா வருணமகாதேவா!

மானத்தை நம்பியல்லோ வருணமகாதேவா!
மக்களைப் பெத்துவிட்டோம் வருணமகாதேவா!

மானம் பண்ணும் கோளாறு வருணமகாதேவா !
மக்க தொந்தி வாடுதப்பா வருணமகாதேவா !

வேலித் தழைப்பறிச்சி வருணமகாதேவா !
விரலெல்லாம் கொப்புளங்க வருணமகாதேவா !

கள்ளி தழைப்பறிச்சி வருணமகாதேவா !
கையெல்லாம் கொப்புளங்க வருணமகாதேவா !

கொப்புளங்க புண்ணுற வருணமகாதேவா !
கோடிநாள் செல்லுதுங்கோ வருணமகாதேவா !

என்ற பாடலைப் பாடுகின்றனர்.

பின்னர் கஞ்சிக் கலயத்தை வெள்ளைச் சேலை உடுத்திய வி ஊரின் எல்லையிலோ, மந்தையிலோ அல்லது சுடுகாட்டிலோ பே உடைப்பார்கள். அவ்வாறே அவர்கள் கொண்டுசென்ற அகப்பை, மனை, சட்டி முதலியவற்றையும் தூக்கி எறிந்துவிடுவார்கள். மந் விட்டு ஊர் எல்லையை நெருங்கி வரும்பொழுது மறுபடியும் வருணதே வழிபட்டுப் பாடுவார்கள். தெற்கே சென்ற வெள்ளி மீண்டும் வட வந்து வறட்சி நீங்கி, வயல் எல்லாம் நீர் பெருகி வற்றாத வளம் ெ வேண்டும் என்று வருணதேவனை வேண்டிப் பாடுவார்கள்.

பாஞ்சாங் கலப்பை வெட்டி
பஞ்சாங்க மேழி செஞ்சி
முகம் சோர்ந்து நிக்கிறுங்க
அந்தரவம் கேட்டு
வந்திறங்கு வருணதேவா !
வடக்கே வெள்ளி வர
வயலெல்லாம் நீர் சொரிய
அந்தரவம் கேட்டு
வந்திறங்கு வருணதேவா !

பொதுவாக இப்பாடலைப் பாடி அப்பெண்கள் கிராமத்தை அடை பொழுது மழை வந்துவிடுகிறது. அப்படி மழை பெய்யாவிட்டால் வூரில் உள்ள குடியானவர்களும், வாலிபர்களும் ஒன்று சேர்ந்து பெண்களை ஊரின் எல்லைக்குள் வரவிடாமல் மறித்து நிறுத்துகிறா ஆனுல் இவ்வழிபாட்டு சடங்கிற்குப் பிறகு பெரும்பாலான நேரங்க மழை வருவதாக நம்புகின்றனர். ஒரு சில நேரங்களில் வராமல் பே தும் உண்டு.

கிராம மக்கள் இறைவனிடம் கொண்டுள்ள பயமும் பக்தி எல்லையற்றது. மக்கள் நம்பிக்கை பெரும்பாலும் வீண்போவதில் இவ்வருணதேவன் வழிபாடு மூன்று நாட்களிலிருந்து ஆறு நாட் வரை சில கிராமங்களில் தொடர்ந்து நடைபெறுகிறது. இச்சடங்கு யும் ஆறு நாட்களுக்குள் மழை வந்துவிடுகிறது என நம்புகிறா மழை வந்தால் மீண்டும் மகிழ்ச்சி பொங்க ஊரில் உள்ள ஆடவர் பாடி, அப்பெண்களை ஆரவாரத்தோடு ஊருக்குள் அழைத்துச் செல்வா

நாடு செழிச்சுடுத்து
நல்ல மழை பெஞ்சிடுத்து
ஊரு செழிச்சிடுத்து
ஒத்த மழை பெஞ்சிடுத்து
கொல்ல செழிச்சிடுத்து
கொள்ளே மழை பெஞ்சிடுத்து
கோளு திரிஞ்சிடுத்து
கோடை மழை பெஞ்சிடுத்து
காலம் செழிச்சிடுத்து
காரி மழை பெஞ்சிடுத்து
வாங்க ஆயா ! வாங்க !!

இத்தகைய முறையில் மழைக் கஞ்சி எடுத்து வருணதேவனை வணங் வழக்கம் கருவூரைச் சூழ்ந்து வடுகப்பட்டி, வெள்ளாளப்பட்டி, வாங் பாளையம், வெண்ணமலை, நரிகட்டியூர், மூல காட்டானூர், ராமசரப் டி ஆகிய ஊர்களில் காணலாம். இவ்வாறு கிராம மக்கள் மழையை ர்பார்த்து ஏங்குவதும், மழை பெய்தவன் மகிழ்ச்சியில் வருணதேவனை ணங்கிப் பாடுவதும் நல்ல நாட்டு இலக்கியங்களாகும்.

அளித்தவர்கள் :

1. திருமதி. மாராயி, வடுகர்பட்டி, கருவூர் வட்டம்.
2. திருமதி. அரக்காணி, வடுகர்பட்டி, கருவூர் வட்டம்.
3. திருமதி. பழனியம்மாள், வெண்ணமலை, கருவூர் வட்டம்.
4. திரு. பிச்சை முத்து, வெள்ளாளப்பட்டி, கருவூர் வட்டம்.
5. திருமதி. பழனியம்மாள், வெண்ணமலை, கருவூர் வட்டம்.

## லச் சீர்திருத்தம் ஆங்கிலேயர் செய்ததா ?

"ஆங்கிலேயர் ஆட்சியில்தான் தென்னாட்டில் நில உடைமைகள், உழுதொழில் ிய அனைத்தும் சீர்திருத்தி அமைக்கப்பட்டன" என்ற ஒரு தவறான கருத்து டையே உண்டு. அவர்கள் வருகைக்கு முன் அது எவ்வாறு இருந்தது என்று ா அவர்களே கூறுகிறார்கள்.

"The lands in general appear to have constituted a clear private pro-ty, more ancient, and probably more perfect, than that of England. e tenure, as well as transfer of this property, by descent, sale, gift and rtgage is fortified by a series of regular deeds, equally various and rious.........

The proprietary right, is either vested in individuals, or in co-parner-ps of persons, each of whom possesses an unalienable interest in the ate, proportioned to the share of the property of which he has become ssessed."

—The "Fifth report" of the Select committee on the affairs of the East India mpany. vol. II; page. 77; London. 1812. India. 1866.



செப்புத் திருமேனி, கி. பி. 12-ம் நூற்றாண்டு
மேலப்பெரும்பள்ளம், தஞ்சைமாவட்டம்.
வட்டணை காட்டவந்த நாயகர், என்னும் தலைப்பைப் பார்க்கவும்

---

## உங்களுக்குத் தெரியுமா ?

வரலாற்றில் வடமதுரை என்று ஓர் ஊர் குறிக்கப்படுகிறது; அது எது? மதுரையின் வடபகுதி அல்ல. வடதேசத்தில் உள்ள மதுராவும் இல்லை. கொங்கு நாட்டுக்காரர் தங்கள் ஊரில் ஒரு வடமதுரை இருக்கிறது என்று கூறுகிறார். அதுபோல இன்னம் பல இருக்கலாம். வரலாற்று வடமதுரை அவை அல்ல. சென்னைக்கு வடக்கே 37 கல்லில் அது இருக்கிறது. சுமார் 75000 ஆண்டுகளுக்கும் முன்னால் அவ்வூரில் மனிதன் வாழ்ந்திருக்கிறான்.

அது உங்களுக்கு எப்படித் தெரியும்? ... ... அடுத்த இதழில் கல்.

# இராஜராஜன்

## ஓர் ஆய்வு

இரா. நாகசாமி.

இராஜராஜன் தமிழ்த் தாயின் ஒப்பருந் தவப்புதல்வன். அவனது ஆற்றலை, அவன் விட்டுச் சென்றுள்ள அளப்பரும் கலைச்செல்வங்களை, அவனது ஆட்சித் திறனை, எங்கோ மூலையில் புற்றிட்டுக் கிடந்த திருமுறைகளைத் தேடி எடுத்து அளித்த பெருமையை, இன்னும் பல சிறப்புகளை நோக்கும்போது இம்மன்னன் இந்திய நாட்டிலேயே ஆண்ட மன்னர்கள் அனைவரிலும் தலையாயவன், சிறந்தவன், போற்றிப் புகழத் தகுந்தவன் என்பது தெளிவு. பல மன்னர்களைப் பற்றிய கல்வெட்டுகளும் செப்பேடுகளும் கிடைத்திருக்கின்றன. அவற்றில் பல அன்று ஆண்ட அரசர்களைப் பற்றியச் செய்திகளைக் கூறுகின்றன. ஆயினும் இராஜராஜனுடைய கல்வெட்டுகள் தனிச்சிறப்பு வாய்ந்தவை. அவற்றில் பலவற்றை இராஜராஜன் எழுதும்படி தானே ஆணையிட்டான். ஆதலின் அக்கல்வெட்டுகளிலிருந்து அம்மன்னனுடைய சிந்தனைகள் எவ்வாறு இருந்தன; அவன் செயலாற்றும் திறமை எவ்வாறு இருந்தது; அவனது தனித்தன்மை என்ன என்பதையும் மிகவும் தெளிவாக நாம் அறிய முடிகிறது.

தஞ்சையில் இராஜராஜன் எடுப்பித்த பெருங்கோயிலில் பல கல்வெட்டுகள் இருக்கின்றன. இவற்றில் பல இராஜராஜனால் கொடுக்கப்பட்ட தானங்களை (பரிசுகளைக்) கூறுகின்றன. பிற மற்றவர்கள் அளித்த பரிசுகளைக் குறிக்கின்றன. இராஜராஜன் அளித்த பரிசுகளை மட்டும் நாம் ஆய்ந்தால் அம்மன்னனின் சிறப்பை தெளிவாக அறியலாம். தமிழ்நாடு தொல்பொருள் ஆய்வுத்துறை, 'தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுகள்' என்ற தலைப்பில் ஒரு நூலை வெளியிட்டுள்ளது. இராஜராஜனது கொடைகள் அதில் இடம் பெற்றுள்ளன.

## கலன்கள்:

இதில் பல அன்று வழக்கிலிருந்த அடுகலன்களின் பெயர்களை நமக்குத் தெரிவிக்கின்றன. தளிகை, மண்டை, கெண்டி, தட்டம், குடம், ஒட்டுவட்டில், கலசம், படிக்கம், நெடுமடல், மானவட்டில், கறண்டிகைச் செப்பு, இலைச் செப்பு, தாரைத்தாள்வட்டில், ஈச்சொப்பிக்கை, இலைத் தட்டு, மூக்குவட்டகை, கைவட்டகை, வட்டில், பிங்காளம், கச்சோளம், ட்டுவம், நெய்முட்டை, குறுமடல் ஆகிய கலன்களின் பெயர்கள் நமக்குக் கிடைக்கின்றன. இவற்றில் பெரும்பாலானவை பொன்னாலும், வெள்ளியாலும் செய்யப்பட்டவை.

ஜன்

இவற்றில் சில எவ்வாறு இருந்தன என்பதையும் இராஜரா தெளிவாக குறித்திருக்கிறான். "தூக்கத்தில் தலையில் தைத்த பதின உட்பட பொன்னின் கொடிக்கருக்கு இரண்டும், சிங்கபாதம் இரண்டும் உட்பட தாரைத்தாள் வட்டில்' (இந்த வட்டிலின் தாள்கள் சிங்கக் க கள் போல் செய்யப்பட்டிருந்தன). 'மூக்கும், அடியும் உட்பட கலசப்ப 'அடியும் மூழலும் உட்பட கறண்டிச்செப்பு.' "யாளிக்கால் நான்கும் லும் உட்பட இலைச்செப்பு" என இம்மன்னன் தான் கொடுத்த சிறு பாத்திரங்களின் உருவங்களைக் கூட தெளிவாகக் குறிப்பிட்டுள்ளது போற் றத்தகுந்தது. ஒரு நெய்முட்டை கூட விட்டுவிடாமல் பதிவு செய்து வைத் துள்ளது எந்த அளவிற்கு கோயில் பொருள்களைக் காக்க வேண்டுமென்று பின்வரும் சந்ததியினருக்கு எடுத்துரைப்பது போல் விளங்குவதைக் காண் கிறோம். இவற்றை இராஜராஜன் பரிகலன்கள் என்று கூறுகிறான்.

இவற்றில் மற்றொரு சிறப்பும் உண்டு. இப்பரிகலன்கள் எங்கி ருந்து வந்த பொருளால் செய்யப்பட்டவை என்பதைக் கூட இராஜராஜன் குறிக்கிறான். தன்னுடைய பண்டாரங்களிலிருந்து கொடுத்தவை எவை? சேரமானையும், பாண்டியர்களையும் மலைநாட்டில் தோற்கடித்து அங்கு பெற்ற பரிகலன்கள் எவை? சேரனையும், பாண்டியனையும் மலைநாட்டில் தோற்கடித்தபோது கிடைத்த வெள்ளியைக் கொண்டு இங்கு செய்து அளித்த கலன்கள் எவை என்பதையும் தெளிவாகக் குறித்துள்ளது வியக்கத்தக்கது. தன்னுடைய பண்டாரத்திலிருந்தும், மாற்றரசர்களை வெற்றி கண்டபோது கொண்ட பண்டாரங்களிலிருந்தும், கொடுத்த பொன்னாலான கலன்கள் எவை என்பதையும் தெளிவாகக் குறித்துள்ளான்.

இந்த கல்வெட்டுகளில் 'தளிகை ஒன்று' என்று பல கலன்கள் திரும்பத் திரும்ப எழுதப்பட்டுள்ளதைக் காண்கிறோம். ஒரே வகையாட கலன்களை ஏன் பலதடவை திரும்பத் திரும்ப எழுதவேண்டு தெளிவாகப் ஐயம் நமக்குத் தோன்றும். ஆனால் கல்வெட்டைச் சற்றுநரியும். ஒரே பார்த்தால் இவ்வாறு எழுதியிருப்பதின் நோக்கம் ெட வேறுபடுவ வகையைச் சார்ந்த கலமாக இருந்தாலும் அவற்றின் எ டுமல்ல! மிக தால் அவற்றைத் தனித்தனியாகக் குறித்துள்ளான். அது ம ட குறைந்து அதிக எடையுள்ள கலத்திலே தொடங்கி படிப்படியாக எ தையும் காண வருகின்ற வகையில் அவற்றை வரிசைப்படுத்தி குறித்துள்ள க் குறித்துள் லாம். உதாரணமாக ஒரு கல்வெட்டில் முப்பது தளிகைகளை 1, 980, 978 ளான். 983 கழஞ்சு எடையுள்ளதில் தொடங்கி 982, 9ன் இந்த பட் என வரிசையாக எழுதப்பட்டுள்ளது எவ்வளவு கவனத்துடன்டு கலன்கள் டியல் தயாரிக்கப்பட்டுள்ளது என்பதும் தெளிவாகும். இரணியில் குறித்து ஒரே எடை உடையவையாக இருந்தால் அவற்றை ஒரே வ எடை எடுத்து விடுவதையும் காண்கிறோம். நெய் முட்டைக்குக் கூட வைத்திருப்பது இன்னும் சிறப்பாகும்.

